சிறப்பிலும் பண்பிலும் கவரப்பட்டு பற்று கொண்டவர் ஆனார்.

இதற்குப் பிறகு திரு கணபதி சாஸ்திரிகள் இல்லற வாழ்க்கையை மேற்கொண்டார்.

இப்படி இருக்கும்பொழுது கோநேரிராசபுரம் என்னும் சிற்றூரில் சாம்பசிவ அய்யர் என்ற மகான் வசித்து வந்தார். வடமொழியைப் பரப்புவதில் ஈடுபட்டிருந்த திரு சாம்பசிவ அய்யர், அந்த ஊரில் இருக்கும் ஸ்ரீவித்யா என்ற அச்சகத்தில் பதிப்பாசிரியராக இருந்தார். வேதாந்த சாஸ்திரத்தைப் பரப்புவதற்காக அச்சிட்டு இருந்த அத்வைத மஞ்சரி முதலிய ஏடுகளை ஒப்பு நோக்குவதற்காகவும் வேதாந்தத்தில் ஈடுபாடு கொண்ட மாணவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுப்பதற்காகவும் துணை செய்பவர்களைப்பெற திரு ராஜு சாஸ்திரிகளை மன்னார்குடி சென்று திரு சாம்பசிவ அய்யர் வணங்கி நின்றார். திரு ராஜு சாஸ்திரிகள் தமது மாணவரான கணபதி சாஸ் திரிகளை இதற்காக நியமித்தார். விருப்பம்போல் திரு சாஸ் திரிகள் கோநேரிராசபுரம் சென்று 'அத்வைத மஞ்சரி' முதலிய ஏடுகளை அச்சிட ஈடுபட்டதுடன் பல்வேறு சாஸ்திர ஏடுகளைப் படிக்க விருப்பம் உள்ள மாணவர்களையும் இளைஞர்களையும் வயது முதிர்ந்தவர்களையும் கண்டு கல்வி அறிவு வழங்கினார். அங்கு மனோரஞ்சகமாகவும் அறிவொளி வளர்ப்பதாகவும் உள்ள பல காப்பிய, நாடக நூல்களை இயற்றினார்.

வடநாட்டிலிருந்து வந்த சிறந்த யோகிகளிடம் இருந்து வைத்திய, யோக சாஸ்திரங்களைப் பயின்றார். பழமானேரி சுவாமிகளிடம் இருந்து வேதாந்தத்தில் மேல்படிப்புபடித்தார்

1892-ம் ஆண்டில் திருவனந்தபுரத்தில் துலாபார மகோத்சவம் தொடர்பாய் நடந்த அறிஞர் அவையில் பங்கு கொண்டு பேரறிஞர்களால் பெருமை படுத்தப் பட்டார். இவருடைய திருதமாக கவி பாடும் திறமையைக் கண்டு கொச்சி அரசர் திரு ராமவர்மா 'கச்சபி' என்ற பட்டத்தை வழங்கினார். 1900-ம் ஆண்டில் ஹூப்ளி நகரத்தில் நடந்த சங்கராசாரியா உத்சவ மண்டலியில் ஒன்று சேர்ந்த அறிஞர்களை துவாரகாமட அதிபதிகளான ஸ்ரீ சங்கராசாரியார் அத்வைத வேதாந்தம் குறித்து சில நுட்பமான ஏழு கேள்விகள் கேட்டார்கள். அறிஞர்கள் பலரும் அந்த ஏழு கேள்விகளுக்கு பதில் எழுதி மடாதிபதிகளுக்குக் கொடுத்தார்கள். ஆனால் அதில் திரு கணபதி சாஸ்திரிகள் எழுதிய விரிவான மேற்கோள்களு

டன் கூடிய அறிவுபூர்வமான பதில் மிகவும் சிறப்பாக இருந்தது என்று ஸ்ரீ துவாரகா மடாதிபதிகள் ஏற்றுக்கொண்டார்கள். மேலும் மகிழ்ந்து 'வேதாந்த கேசரி' என்ற பட்டத்தையும் வழங்கிப் பெருமை செய்தார்கள்.

திரு சாஸ்திரிகள் 1901-ம் ஆண்டு அத்வைத சபையில் அங்கம் வகித்தார். அது முதல் பத்து ஆண்டு காலம் அத்வைத சபையை நடத்துவதில் முக்கிய பங்கு கொண்டார். 1905ம் ஆண்டு திரு சாஸ்திரிகள் ஸ்ரீ காமகோடி பீடத்தில் ஆஸ்தான அறிஞராகப் பதவி ஏற்றார்கள். திரு சாஸ்திரிகள் காமகோடி பீடாதிபதிகளான அருள்மிகு சந்திரசேகரேந்திர சரஸ்வதி சுவாமிகளுக்கு காப்பியங்களையும், சாஸ்திரங்களையும் கற்பிக்கும் பெரும் பாக்கியத்தை அடைந்தார்கள். இந்த சமயத்தில் அந்த மடத்தில் பகவத் கீதை, ஞான வாசிஷ்டம், ஸூதசம்ஹிதை ஆகிய ஏடுகளைப்பற்றி பல சிறந்த சொற்பொழிவுகள் ஆற்றினார்கள்.

1911-ம் ஆண்டில் கேரளத்தில் உள்ள கள்ளிக்கோட்டை பாலக்காடு முதலிய இடங்களில் செய்யப்பட்ட பிரம்மசூத்திரம், உபநிடதம், பகவத்கீதை ஆகியவற்றைப்பற்றி நடத்திய சொற்பொழிவுகள் மக்களை வெகுவாகக் கவர்ந்தன. கள்ளிக்கோட்டை அரசரான சாமூதிரி ராஜா திரு சாஸ்திரிகளுடைய பெரும் புலமையை அறிந்து பல வெகுமதிகளை அளித்தார்

பேரறிவாளன் அல்ப ஆயுளலோ சந்ததி இல்லாமலோ ஏழ்மையானவனுகவோ இருப்பான் என்ற ஆன்றோர் வாக்கு திரு சாஸ்திரிகளைப் பொருத்த வரையில் உண்மையானதாக இருந்தது. திரு சாஸ்திரிகள் அல்ப ஆயுளில் மகப்பேறும் இல்லாத துயரத்தை அடைந்தார்

இங்ஙனம் இருந்தபொழுதிலும் அவர் பரம்பொருள் நினைவில் ஈடுபட்டு திரு சங்கர பகவத்பாதர், திரு சதாசிவப் பிரம்மேந்திர சரசுவதி முதலிய பெரியவர்களால் அருளப்பட்ட கிரந்தங்களை படித்துக்கொண்டு ஞானம் நிலைத்தவராக காலம் கழித்தார்கள்.

1912-ம் ஆண்டு தமது கடைசிக்காலம் நெருங்கி விட்டது என்பதை உணர்ந்தார். அது முதல் விதிப்படி ஆபத் சந்நியாஸத்தைக் கைக்கொண்டார்கள். உடனே பூத உடல் விட்டு

புகழ் உடம்பு அடைந்தார்கள்.

இவருடைய புலமையைப்பாராட்டி, புகழுடம்பு எய்திய பிறகு இங்கிலாந்து அரசு மகாமகோபாத்யாய என்ற அரும் பெரும் விருது வழங்கி கௌரவித்தது.

திரு கணபதி சாஸ்திரிகள் 41 ஆண்டுகள் மட்டுமே இந்தப் பூமியில் வாழ்ந்திருந்தாலும் அந்த மிகக் குறைந்த வாழ்நாளில் பல மாணவர்களுக்கு கற்பித்தும் பல்வேறு நூல்களை எழுதியும் இருக்கிறார்கள்.

அவர்கள் எழுதிய நூல்களில் சிலவற்றைக் கீழே தருகிறோம்.

வைதிக - கர்மகாண்ட கிரந்தங்கள் :

முகுரம், காலஸ்வரகௌமுதீ, காயத்ரீபாஷ்யம், யஜ்ஞலவபவப்ரகாச:, முகுரமுகமுத்ரணம், ஆபஸ்தம்பபித்ருமேதஸூத்ரவ்ருத்தி:, சபிண்டீகரணவிதி, சபிண்டீ: கரணகௌஷரநிர்ணய:, தீபாவலீநிர்ணய:, விபூதிதாரணம்

வேதாந்த கிரந்தங்கள் :

ஈசோபநிஷத்விபூதி:, கேனோபநிஷத்விபூதி:, நைர்குண்யஸித்தி:, அதசப்தார்த்தவிசார., சாரீரகமீமாம்ஸாரஹஸ்யம், நி.ஸ்ரேயஸநிஸ்ரேணி., ஆசார்யோக்திவிபூஷணம், மாயாநிவிருத்திசதகம, யோகீஸ்வரதர்சனமஹிமா, ஆசாதூஷணம், கர்மஞம் சித்தசுத்திப்ரகார:, த்ரவ்யகுணப்ரகாச. ஸ்ரவணவிதிவாக்யார்த்த .

காவ்ய - நாடக கிரந்தங்கள் :

துருவசரிதம், தடாதகாபரிணய , சாரசிகாஸந்தான:, ஜீவவிஜய , ரசிகபூஷணம், அங்யாபதேசபஞ்சாசத், லக்ஷ்மீவிலாஸ:, வ்ருத்தமணிமாலா, பர்யாயோக்திசதவ்யாக்யா, ஸாம்ராஜ்யலக்ஷ்மீபரிணய:.

ஸ்தோத்திர கிரந்தங்கள் :

கடாக்ஷசதகம், ஸாரஸ்வதஸஹஸ்ரம், துரகசதகம், பரமேஸ்வராஷ்டகம், மகாமாயாஷ்டகம், சூர்யத்வாதசம், ஸம்ஸ்க்ருதாஷ்டகம், சுப்ரஹ்மண்யாஷ்டகம், சஜனஸ்சராஷ்-

டகம், க்ருஷ்ணத்வாதசகம், குருவாயுபுரேசாக்ஷரமாலாஸ்தவ: ஸ்ரீவாதபுரநாதாஷ்டகம், குருவாயுபுரநாதபஞ்சரத்னம், தேசிகதண்டகம், ஸ்ரீசங்கராசார்யாஷ்டோத்தரம், குருராஜஸப்ததி:, ஆர்த்திஹராஷ்டகம், தேவீத்வாதசமஞ்சரீ, கும்பேசாஷ்டகம், தேவ்யஷ்டப்ராஸ:, மூகப்ரஸாதாதர்ச:, அனந்தபத்மநாபஸ்துதி:, ஆசீர்வாதமஞ்சரீ.

தொகுக்கப்பட்ட கிரந்தங்கள் :

ந்யாயரக்ஷாமணி:, ஸ்ரீருத்ரபாஷ்யம், காச்யபக்ஷேத்ரமாகாத்ம்யம், மஹாபாரதம்-சாந்திபர்வம் (தமிழ்).

।। गायत्रीमन्त्रः ।।

ॐ भूर्भुवस्वः ।

तत्सवितुर्वरेण्यं भर्गो देवस्य धीमहि ।

धियो यो नः प्रचोदयात् ।।

## காயத்ரீ மந்திரம்

ஓம் பூர்புவ:ஸ்வ:.

தத்ஸவிதுர் வரேண்யம் பர்கோ தேவஸ்ய தீமஹி.
தியோ யோ ந: ப்ரசோதயாத்.

*(எந்தத் தேவன் எங்களுடைய புத்தி விருத்திகளை தூண்டுகிறானோ அந்த ஸவிதாவினுடைய சிறப்பான தேஜஸ்ஸை தியானம் செய்கின்றோம்).*

|| ஸ்ரீ: ||

# காயத்ரீ பாஷ்யம்

மோக்ஷமார்கபரிஷ்காரஹேதவே மூர்த்திதாரிண:
ஸ்ரீசங்கரார்யசரணௌ சரணம கரவாமஹை. 1

1. ஸ்ரீ கைலாசபதியான பரமசிவன் மக்களுக்கு மோட்ச மார்க்கத்தைப் பற்றி தெளிவு படுத்துவதற்காக சரீரத்தை எடுத்துக்கொண்டு இப்பாரின்கண் அவதரித்த ஸ்ரீ சங்கர பகவத் பாதாளின் பாத கமலங்களைச் சரணமாக அடைகிறோம்.

அவ்யாஜகருணாமூர்த்திமவித்யாத்வாந்தபாஸ்கரம்
ஸ்ரீத்யாகராஜமகினம் தேசிகேந்தரமஹம் பஜே. 2

2. கபடமற்ற கருணை சொரூபியாயும் அஞ்ஞானமாகிற இருளுக்கு சூர்யனையும் இருக்கின்ற ஸ்ரீ தியாகராஜமகி என்னும் குருச்ரேஷ்டரை நான் சேவிக்கிறேன்.

ச்ருதிஸ்மிருதீதிஹாஸானி ச்ருத்வா ஸத்ஸம்ப்ரதாயத:
சாவித்ரியாஸஸாரபூதோர்த்த: ஸமக்ஷேபேண கத்யதே. 3

3. வேதம், ஸ்மிருதி, இதிகாசம் இவைகளை அறிந்து அற நெறியோரின் பழக்கத்தைப் பின்பற்றி 'சாவித்ரீ' என்னும் மகாமந்திரத்தின் சாரமான அர்த்தத்தை சுருக்கமாகச் சொல்லுகிறேன்.

காயத்ரீஜபநிஷ்டானாம் ப்ராஹ்மணானாம் ஹி தீமதாம்
த்யேயவஸ்துஸ்வரூபம் தத்யதாசாஸத்ரம் விவிச்யதே. 4

4, காயத்ரீ ஜபத்தில் மிகப் பற்றுதல் உள்ள அறிவாளிகளான அந்தணர்களுக்கு தியானம் செய்யத் தகுதியான சொரூபம் ஆனது சாஸ்திர முறைப்படி விவரிககப் படுகிறது.

உத்யந்தமஸ்தம்யந்தம் சாப்யாதித்யம் த்யாயதேதி ந:
ஸந்த்யாகர்மவிதாநாய ப்ரவ்ருத்தா சாஸ்தி ஸா ச்ருதி:. 5

5. சந்தியோபாசனத்தை விதிப்பதற்காக முன் வந்த வேதமானது ''உதிக்கின்றவனும் அஸ்தமிக்கின்றவனுமான ஆதித்யனை தியானம் செய்யுங்கள்!'' என்று நமக்குக் கட்டளை இடுகிறது.

ஐஹிகாமுஷ்மிகச்ரேயோ ஹேதுரேஷோ/வகமயதே
யதிந்த்ரியநிரோதேன சாஸ்த்ரோக்தம த்யானமாந்தரம். 6

6. புலன்களை அடக்கி சாஸ்திரப்படி இருதயத்தில் தியானம் செய்வது என்பது இகபர சிரேயஸ்ஸிற்கு காரணம் என்று அறியப்படுகிறது.

ப்ராஞ்சோ ஹி முநயஸ்ஸர்வே த்யானநிஷ்டாபலாத்பரம
அஸமாகமாஸ்சாயகரீமகிலாம ஸித்திமாபனுவன. 7

7. முன்னோர்களான முனிவர்கள் தியானத்தின் சக்தியால் நம் போன்றவர்கட்கு மிக வியப்பைத்தரும் எல்லா சித்திகளையும் அடைந்து இருக்கின்றனர்.

யதயபீ த்யானமார்கோ/யமிதானீம லுப்த ஏவ ந:
மஹிமாபி ந விபரேஷு மஹர்ஷிகுலஜேஷ்வபி. 8

8. சகல சித்திகளுக்கும் காரணமான இந்த த்யான மார்க்கம் இக்காலத்தில் நம்மிடம் மறைந்து விட்டது மகரிஷி வம்சத்தில் பிறந்தும் அந்தணர்களிடத்தில் சக்தி இல்லாமல் போய்விட்டது.

கூடஸ்ய த்யானமார்கஸ்ய குருசிஷ்யபரமபரா
ஏகைவ ரக்ஷணோபாயபூத ஸா சேதானீம விநாசிதா. 9

9. மிகவும் இரகசியமான தியான மார்க்கத்தின் நிலைநிற்பிற்கு குரு சிஷ்ய பரம்பரை ஒன்றே காரணமாக இருந்தது. அந்த குரு பரம்பரையும் இப்பொழுது அழிந்து விட்டது.

ஆஸேதோராஹிமாத்ரேஸை மருக்யமாணோ/பி யத்னத:
ஏகோ த்வௌ வா பவேதாம வா ந ஜானே த்யானசீலினௌ. 10

10. சேதுக் கடல் முதல் இமயமலை வரையிலும் சிரமப்பட்டு தேடிப் பார்த்தாலும் தியானத்தில் ஆழ்ந்து இருப்பவர்கள் இரண்டொருவர் இருப்பதே அரிது.

அஹோ பத தசா சோச்யா ஸேயமார்யத்விஜன்மனும
அத்யுத்க்ருஷ்டோ த்யானமார்கோ யதகாத்த்ருசீம் தசாம் 11

*11. மிகவும் மேன்மையான தியான மார்க்கம் இந்நிலை யை அடைந்து விட்டது என்பது ஆரியர்களான பிராமணர் களின் பொருட்டு மிக வருந்தத் தக்கதே*

நஹி கஸசின மருகயதே ந ச கோƒபி குதூஹலீ
ந ச சுஸ்ரூஷதே பரிதயா கஷ்டகாலஸ்ய சேஷ்டிதம. 12

*12. ஒருவரும் இந்த தியான மார்க்கத்தை தேடுவதில்லை; இந்த வழியில் ஆர்வம் உள்ளவர்களாகவும் இல்லை விருப்பத் துடன் கேட்கவும் விரும்புவதில்லை. காலத்தின் போக்கு மிகவும் கஷ்டமானதே.*

ஸாவஸயாஸய நிதானம து ஸமபரதி பரதிபாதி மே
மூலபூதம யதேதந ஸநதயோபாஸனமஸதமைத 13

*13. எல்லாவற்றிற்கும அடிப்படையான சந்தியோ பாசனம் அடியோடு போய்விட்டதுதான் இதற்குக் காரணம் என்று இப்பொழுது எனக்குத் தோன்றுகிறது.*

மூலம து ஸர்வஸிதத்னும காயதரீஸாதனம பரம
ததஸிதெள வருதா ஸாவம ததஸ்தெள ச வருதாகிலம. 14

*14. சர்வ சித்திகளுக்கும் அடிப்படையானதாகவும் மேன்மையான உபாயமாகவும் உள்ளது காயத்ரீயே. அந்த சித்தி இல்லாவிட்டால் எல்லாம்பயனற்றதே; அது இருந்தால் மற்றவை எல்லாம் பயனற்றவை ஆகும். (அதாவது மற்ற பலன்கள் எல்லாம் இந்த காயத்ரீயில் கிடைத்து விடும் என்று பொருள்)*

சதுர்தா தயேயவஸதூநி ஸமகரஹா திஹ போதயே
யோ யத்ர சகதஸததவஸது ஸ தயாயது யதாமதி. 15

*15. தியானம் செய்ய வேண்டிய பொருள் நான்கு வித மாகும் என்பதைச் சுருக்கமாக இங்கு சொல்கிறேன. எவன் எந்த உருவத்தை தியானம் செய்ய தகுதி உள்ளவனோ அவன் அந்தப் பொருளை அறிவிற்கு எட்டிய வரை நன்றாக தியானம் செய்ய வேண்டும்.*

ததராகில்பரேக்ஷணீயம ஹாடகதயுதிமணடலம
அசேஷலோகசேஷடைகம ஹேதுபூதநிஜோதயம. 16

அக்ஷயனுகராஹஸம நருணாமாராதயமகிலா தவிஜை:
ஆதித்யரூபமாதயம ஸயாத் ஆமனயமயவிகரஹம 17

*16-17.* எல்லோராலும் நன்றாகப் பார்க்கத் தகுந்ததும் மிகவும் ஒளியுடன் கூடிய மண்டலத்தை உடையதும் அனைத்து ஜீவிகளின் உணர்ச்சிகளுக்குக் காரணமான தனது உதயத்தை உடையதும் கண்களுக்குப் பார்க்கும் சக்தியைக் கொடுதது அனுக்ரஹம் செய்வதும் சமஸ்த்த விப்ரர்களாலும் வணங்கத் தகுந்ததும் வேத சொரூபியாகவும் இருக்கின்ற ஆதித்யரூபம் முதலாவதாகும்.

தவிதீயம து தருதஸவாணதயோதமாஞகிலாஙககம
ஸாவபாபமௌகஸமபநதகநதலேசவிவர்ஜிதம ' 18

சோணமபுஜேக்ஷணதவநதவம பாணௌ சஙகாதிதாரகம
ஆதிதயாநதாயாமிரூபம ஸ்ரீமநநாராயணுதமகம 19

*18-19.* உருக்கிய தங்கம் போல் பிரகாசிக்கின்ற அங்கங்களைக் கொண்டவரும அனைத்து பாபக் கூறுகளின் பந்தம் சிறிது கூட இல்லாமல் இருப்பவரும் செந்தாமரை போன்ற இரு கண்களை உடையவரும் கைகளில் சங்கு முதலியவைகளை அணிந்து கொண்டிருப்பவரும் சூர்யனுக்கும் அந்தர்யாமியாக இருப்பவரும் ஆன ஸ்ரீமந் நாராயண சொரூபம் இரண்டாவதாகும்.

நிடிலாக்ஷம நீலகணடம நிரஸதாசேஷபாபமகம
உமாஸநாதமுதஸமஜஞமுதபுலலகமலேக்ஷணம 20

நிாமருஷடகனகபரகயநிகிலாஙகஸமுஜவலம
மருதுலஸமிதவகதராபஜமருடரூபம தருதீயகம 21

*20-21.* நெற்றியில் கண் உள்ளவரும் நீலகண்டரும் பாபங்களை அழிப்பவரும் பார்வதியுடன் கூடியவரும் 'உத்' என்ற பெயருள்ளவரும் மலர்ந்த தாமரையைப் போன்ற கண்களை உடையவரும் நிர்மலமான தங்கத்திற்கு ஒப்பான எல்லா அவயவங்களாலும் மிகவும் பிரகாசித்துக் கொண்டிருப்பவரும் மிருதுவான புன்சிரிப்புடன் கூடியவருமான பரமேசுவரனின் ரூபம் மூன்றுவதாகும்.

உச்சாவசபராணிஜாலமனேவருதயவபாஸகம
அசேஷஜகதாபாஸகலபஞஸபதமத்வயம. 22

அஸமதாதிஷு நிாபேதமாதிதயாநதேஷு பாஸுரம
பரிபூாணசிதானநகபரரூபம துரீயகம 23

*22-23.* உயர்வு, தாழ்வோடு கூடிய உயிர்களுடைய மனோவ்ருத்தியை பிரகாசப்படுத்திக்கொண்டும் அனைத்துலக

தோற்றத்தின் கற்பனைக்கு ஆதாரமாயும் அத்வயமாயும் நம் போன்ற எல்லோரிலும் வேறுபாடு இல்லாமல் இருப்பதும் சூர்யன் முதலியவர்களில் பிரகாசித்துக் கொண்டிருப்பவரு மான எங்கும் நிறைந்த ஆனந்தரூபமான பரபிரம்மம் தியானத்திற்கு உரிய நான்காவது ரூபமாகும்.

க்ரமாதமீஷு ரூபேஷு க்ரமமாணமதி: புமான்
ஸம்ஸித்திம் லபதே யத்வா யதேச்சம் த்யாயதாமிஹ. 24

யாதவோ ராகவோ வா‌ர்த ஹயக்ரீவோர்தவா குஹ:
உமா வார்பி ரமா வாணீ வஜ்ரீ வா வாரணானன:. 25

சிவோ வா யதி வா விஷ்ணுரன்யத் வா தைவதாந்தரம்
த்யாதுமிஷ்டம் யத்யதேதத் த்யாயதாதித்யமண்டலே. 26

ஸர்வேஷாமபி தேவானும் ஸவிதுர்மண்டலே ஸ்திதி:
த்யானம் ச மந்த்ரசாஸ்த்ரேஷு ஸ்பஷ்டமேவ விதீயதே. 27

24-27. வரிசையாகச் சொன்ன இந்த ரூபங்களில் புத்தியை செலுத்திய மனிதன் உயர்ந்த சித்தியை அடைகிறான். இல்லாவிடில் ஸ்ரீ கிருஷ்ணன், ஸ்ரீ ராமன், அயக்ரீவன், சுப்பிரமண்யன், பார்வதி, இலட்சுமி, சரசுவதி, இந்திரன், கணபதி, சிவன், விஷ்ணு அல்லது மற்ற எந்த தேவதையை தியானம் செய்ய விருப்பமோ அந்த தேவதையை ஆதித்திய மண்டலத்தில் தியானம் செய்யலாம். ஏனென்றால் எல்லா தேவதைகளுக்கும் சூரிய மண்டலத்தில் இருப்பும் தியானமும் மந்திர சாஸ்திரங்களில் தெளிவாகச் சொல்லப்பட்டிருக்கின்றன.

தஸ்மாதைகாக்ரியமாஸாதாய யதிதவ்யம் சனை: சனை:
அப்யாஸோ ஹி ந்ருணும் காலாதஸாத்யமபி ஸாதயேத். 28

28. ஆகையால் மனதை ஒரேயிடத்தில் நிறுத்த மெல்ல முயற்சி செய்யவேண்டும். மனிதர்களின் விடாமுயற்சி சாதிக்க முடியாததைக்கூட சாதித்துவிடும்.

தேசாத் காலாத் ததார்த்ருஷ்டாத் தேவதாயா அபீச்வராத்
ஸத்யம் ப்ரவீமி ஸர்வஸ்மாத் ப்ரபலம் பௌருஷம் ந்ருணும். 29

29. தேசம், காலம், அதிர்ஷ்டம், தேவதை, கடவுள் இவை எல்லாவற்றைக்காட்டிலும் மனிதர்களுடைய பௌருஷமே மிகவும் பலம் உடையதாகும்.

ஆலஸ்யஜனிதாம் நித்ராம் அவதூயாதிதூரத:
உத்திஷ்டத த்யாயத ச ஸ்வகம் மாஹாத்ம்யமாப்னுத 30

*30. சோம்பேறித்தனத்தால் வரும் தூக்கத்தை வெகு தொலைவில் விட்டு விட்டு எழுங்கள். தியானம் செய்யுங்கள். தனது இயற்கையான மகிமையை அடையுங்கள்.*

உபதேஷ்டுர் குணோ வா ஸ்யாத் தோஷோ வேதி ந சிந்த்யதாம்
உபதேச: ஸமுசிதோ ந வேதி து விசார்யதாம். 31

*31. உபதேசம் செய்பவரின் குண தோஷங்களைச் சிந்திக்காமல் உபதேசம் நல்லதா இல்லையா என்பதை சிந்திக்க வேண்டும்.*

ரஹஸ்யே த்யானமார்கே/ஸ்மிந் திங்மாத்ரமிஹ தர்சயே
விசேஷாம்ஸததரதத்ரத்யைா விஜாநீத மஹாதமபி: 32

*32. மிக இரகசியமான இந்த தியான வழியில் சிறிதளவு தான் இங்கு கூறப்படுகிறது. இதைப் பற்றிய சிறப்புகளை அங்கங்கு உள்ள பெரியோர்கள் மூலம் நன்கு அறிந்து கொள்ளுங்கள்.*

*இந்த உலகத்தில் எல்லா அந்தணர்களுக்கும் சாவித்ரீ ஜபம் ஒன்றே மிக முக்கியமானது. அந்த சாவித்ரீ என்ற காயத்ரீயின் உபதேசத்திலிருந்தே மந்திரங்களால் செய்யப் படுகின்ற சாஸ்திரங்களில் சொல்லப்படும் இரண்டாவது பிறப்பு[1] பிராமணர்களுக்கு உண்டாகின்றது. இதற்கு ஒப் பான மற்றொரு மந்திரம் இல்லை. "ந காயத்ரியா: பரோ மந்த்ர:"[2] என்று ஸ்மிருதியும் கூறுகிறது. பஞ்சாக்ஷரம், அஷ்டாக்ஷரம் முதலிய மந்திரங்களும் காயத்ரீ ஜபத்திற்கு முன்பாகவோ காயத்ரீஜபம் செய்யாமலோ ஜபித்தால் நினைத்த பலனைக் கொடுக்காது.*

---

1. *கௌ.த.ஸூ. 1.10; ஆ.த.ஸூ. 1.1.16-18; மனு. 2.169.* cf. *வஸிஷ்ட. 2.2-4.*

2. *யோகயாஜ்ஞவல்க்ய. 10.11.*

அப்படிப்பட்ட காயத்ரீ என்ற மகா மந்திரத்தை ஆயிரம் முறை ஜபிப்பது உத்தமமும், நூறு முறை ஜபிப்பது மத்தியமமும், பத்து முறை ஜபிப்பது அதமமுமாகும். இதற்கும் குறைவாக ஜபிப்பது அதமத்திலும் அதமமும் சாஸ்திரத்திற்கு ஒவ்வாததும்[3] ஆகும். இந்த காயத்ரீ மந்திரமானது மூன்று பாதங்களுடன் கூடியது.[4] அதில் 'வரேண்யம்' என்பது வரை முதல் பாதம்; அதற்குப் பிறகு 'தீமஹி' என்பது வரை இரண்டாவது பாதமும் மீதியிருப்பது மூன்றாவது பாதமும் ஆகும். இந்த மூன்று பாதங்களில் சேர்ந்து இருபத்தி நான்கு எழுத்துக்கள் இருக்கின்றன.[5] ஆனால் இருபத்தி மூன்று எழுத்துக்கள்தான் எண்ணிக்கையில் இருந்தாலும் முதல் பாதத்தின் கடைசி எழுத்தான 'ண்யம்' என்ற ஓர் எழுத்தை 'ணி' என்றும் 'யம்' என்றும் இரண்டு எழுத்துக்களாக வைத்துக் கொண்டு இருபத்தி நான்கு எழுத்துக்களை கற்பித்துக் கொள்ள வேண்டும்.[6] இருபத்தி நான்கு எழுத்துக்களாக கற்பனை செய்யப்பட்டது காயத்ரீ ஜபத்தைத் தவிர மற்ற ஹோமாதிகளுக்கு மட்டும்தான். ஜப காலத்தில் இருக்கிறபடியே இருபத்தி மூன்று எழுத்துக்களாக ஜபிக்க வேண்டும். காயத்ரீ என்ற பெயருள்ள சந்தஸ்ஸில் எல்லா இடத்திலும் ஒன்றுசேர்ந்து இருபத்தி நான்கு எழுத்துக்களாக இருக்கவேண்டியிருந்தாலும் எந்த இடத்தில் 'நிச்ருத்காயத்ரீ' என்ற பெயருள்ள சந்தஸ் சொல்லப்படுகிறதோ அந்த இடத்தில் ஓர் எழுத்து குறைந்தே இருக்கும். "ஏகாக்ஷரவிஹீனா து நிச்ருதித்யபிதீயதே"[7] என்று ஸ்மிருதியும் இருக்கிறது.

---

3. கண்வ. 267; வஸிஷ்ட 26 16; பாரத்வாஜ. 7.1.

4. ஜை ப்ரா. 3 6; தா.ப்ரா. 10.5.4; தை.ஆ. 10.35; cf. தா ப்ரா 16.11.10.

5. தை.ஸம். 2.5.10.3; 5.3.3 4; மை.ஸம். 1.6.10; ஐ.ப்ரா. 3.39; ஜை.உ.ப்ரா. 1 4.3 2; தை.ஆ. 10.35.

6. ப்ரு.உ. 5.14.1., சாம்.பா; நி.க. p.135; காடகம் 1.9.13.

7. cf. பிங்களச்சந்த: 3.59; கா.ஸ.ஸூ. 5.1; ரிக்.ப்ரா. 17.2., உவடபாஷ்யம்.

காயத்ரீ மந்த்ரத்திற்கும் ஜபகாலத்தில் நிச்ருத்காயத்ரீ தான் சந்தஸ்; காயத்ரீ மட்டும் அல்ல.

"விஸ்வாமித்ரரிஷிஸ்சந்தோ நிச்ருதகாயத்ரமுச்யதே
தேவதா பரமாத்மா வா ஸவிதா வா ப்ரகீர்த்திதா:
ப்ராணாயாமே ஜபேத்வர்க்யதானே ச விநியுஜ்யதே."[8]

என்று ஸ்மிருதியும் இருக்கிறது முதலில் பிரணவம் என்னும் ஓங்காரம்; பிறகு 'பூ:, புவ: ஸ்வ:' என்ற மூன்று வியாகிருதிகள்; அதற்குப்பின் சாவித்ரீயின் மூன்று பாதங்கள் இதுவே காயத்ரீ மந்திரத்தின் உருவமாகும். இந்த மந்திரத்தை ஜபம் செய்யும் காலத்தில் ஐந்தாகப் பிரிக்கவேண்டும். முதலாவது பிரணவத்திற்குப் பிறகு; இரண்டாவது வியாகிருதி திரயத்திற்குப் பிறகு; மந்திரத்தின் ஒவ்வொரு பாதத்தின் முடிவிலும் ஒவ்வொன்றும், இவ்வாறு ஐந்தாகப் பிரிக்காமல் ஜபிக்கக் கூடாது.

"பஞ்சாவசானு காயத்ரீ பஞ்சபாதகஹாரிணீ
அச்சிந்நபாதாகாயதரீ பரஹமஹதயாம பரயச்சதி."[9]

என்று ஸ்மிருதியும் கூறுகின்றது. மேலும் மந்திர ஜப விஷயமாக ரிஷி, சந்தஸ், தேவதை, கரந்நியாசம், அங்கந்நியாசம், கவசம், மாலை, கீலகம் முதலிய அநேக விஷயங்கள் விஸ்தாரமாகத் தெரிந்துகொள்ளவேண்டியிருந்தாலும் இவைகளுக்குள் கட்டாயமாகத் தெரிந்து கொள்ளவேண்டியது மூன்றுதான். அவை ரிஷி, சந்தஸ், தேவதை என்பவையாகும். இம்மூன்றையும் தெரிந்துகொள்ளாமல் செய்யப்படுகிற மந்திர ஜபமானது பலத்தைக் கொடுக்கமாட்டாது.

"யோ ஹ வா அவிதிதாஷேயச்சந்தோதைவதபராஹமணேன
மந்தரேண யஜதி வாʃத்யாபயதி வாஸதாணும வாச்சதி
கர்த்தம் வா பத்யதி ப்ர வா மீயதே, தஸமாதேதானி
மந்த்ரே மந்த்ரே வித்யாத்."[10]

என்று வேதமும் கூறுகிறது. ந்யாஸம் முதலியவைகளை அனுஷ்டிப்பது மிக விசேஷமாகும்; செய்யாவிட்டால் தோஷம் ஒன்றுமில்லை.

---

8. வ்யாஸ: q. by ஸ்ம்ரு மு. ஆ.கா.

9. வாதூல. 143

10. cf. ஆ.ப்ரா. 1.1.6; ப்ர.ஸ௦. 1.3.30., சாம்.பா.

தபோமகிமையாலும் பரமேசுவரனின் அனுக்கிரஹத்தாலும் அந்தந்த மந்திரத்தை உலகத்தில் முதல் முதலாக வெளியிட்டவர் யாரோ அவரே ரிஷி ஆவார். உலகில் அந்தந்த மந்திரத்தின் பிரசாரம் அந்தந்த ரிஷி பரம்பரை மூலமாகவே வெளியாகி இருக்கின்றது. ஆகவே எவர் எந்த மந்திரத்திற்கு ரிஷியோ அவரே அதற்கு ஆதி குருவாவார். நமக்கு மந்திரத்தை உபதேசித்த குரு எவ்விதம் பூஜிக்கத் தகுந்தவரோ அவ்விதமே ஆதிகுருவும் மிகவும பூஜிக்கத் தகுந்தவராவார். அவரை எக்காலத்திலும் மறக்கக் கூடாது. மந்திர சித்தியை அடைந்த அந்த ரிஷியின் அனுக்கிரஹத்திற்காக ஜபத்தின் துவக்கத்தில் அவரை நினைப்பது மிகவும் அவசியமாகும்.

சந்தஸ் என்பது மந்திரங்களின் எழுத்துக்களை நிர்ணயித்துக் காட்டுவதற்காகும். சந்தஸ்ஸின் அறிவு இல்லாவிட்டால் மந்திரங்களில் எவ்வளவு எழுத்துக்கள் என்ற சந்தேகம் நீங்க வேறு ஓர் உபாயம் இல்லாமல் ஆகிவிடும். காயத்ரீ மந்திரத்தில் எழுத்துக்கள் இருபத்தி மூன்று அல்லது இருபத்தி நான்கா என்ற சந்தேகத்திற்கு 'நிச்ருத்காயத்ரீ சந்தஸ்' என்று சொல்லுமிடத்தில் இருபத்தி மூன்றும் மற்ற இடங்களில் இருபத்தி நான்கும் எழுத்துக்கள் என்று சந்தேகமின்றி கூறமுடியும். இது சந்தஸ்ஸின் ஞானத்தால் மட்டுமே சாதிக்க முடியும்; மற்றொன்றால் முடியாது. ஆகையால் மந்திர சொரூபத்தைப் பற்றிய சந்தேகம் வராமலிருக்க சந்தஸ்ஸின் அறிவும் கண்டிப்பாக வேண்டியதாக இருக்கிறது.

தேவதையோ என்றால் அந்தந்த மந்திரங்களால் தெரிவிக்கப்பட்டதும் மந்திரஜபம் முதலியவைகளால் போற்றப்பட்டதும் தானுகவே உபாஸகர்களுக்கு தக்க சமயத்தில் பலத்தைக் கொடுப்பதுமாகும். அங்கங்களோடு கூடிய எல்லா மந்திரஜபமும் தேவதையின் அனுக்ரகத்திற்காகவே செய்யப்படுகிறது என்ற காரணத்தால் அந்த தேவதையே மந்திரங்களுக்குள் முக்கியமாகும்.

தேவதையின் சொரூபத்தை தியானித்துக் கொண்டு செய்யும் ஜபமானது மிகவும் வீரியமுள்ளதாக ஆகும். சந்தியாகர்மத்தை விதிப்பதற்காக வந்த வேதம் தியானமே முக்கியமானது என்றும் அதை இரண்டு சந்தியைகளிலும் செய்ய வேண்டுமென்றும் உபதேசிக்கிறது.

மந்திரத்தைக் கண்டறிந்த ரிஷி குருவாவதாலும் அவர் சிரஸ்ஸால் வணங்கத் தக்கவராவதாலும் மந்திர ஜபத்தின் துவக்கத்தின் பொழுது அந்த மந்திரத்தினுடைய ரிஷியை சிரஸ்ஸில் நியஸிக்க வேண்டும். பிறகு சந்தஸ்ஸின் நியாஸத்தைச் செய்யவேண்டும். எல்லா சந்தஸ்ஸுகளும் சொல்லால் பிரகாசிப்பதால் முகத்தில் அந்தந்த மந்திர ஸம்பந்தமான சந்தஸ்ஸை நியாஸம் செய்ய வேண்டும். அதற்குப் பிறகு தேவதாநியாஸம் செய்ய வேண்டும். சர்வேசுவரனை பரமாத்மாவே அந்தந்த மந்திரத்தில் விவரிக்கின்ற சகல தேவதா ரூபமாக பிரகாசிக்கின்றது. அந்த பரமாத்மா இருதய குகையில் வசிப்பதால் மந்திர தேவதையே இருதயஸ்தானத்தில் நியாஸம் செய்யத் தக்கது என்பது இயல்பு.[11]

காயத்ரீ மந்திரத்திற்கு ரிஷி விஸ்வாமித்திரரும், சந்தஸ் நிச்ருத்காயத்ரீயும், தேவதை ஸவிதாவோ அதற்கும் அந்தர்யாமியான நாராயணனோ பரமசிவனோ பரமாத்மாவோ ஆகும்.

இங்கு ஒரு மந்திரத்திற்கு நான்கு தேவதைகள் எவ்விதம் பொருத்தமாகும் என்ற சந்தேகத்திற்கு இடமுண்டு. உண்மையில் ஒரே பரமாத்மாவே உலக நன்மைக்காக அந்தந்த தேவதா ரூபத்தில் விளங்குகிறது. பல ரூபமாக இருப்பினும் தேவதைகளுக்கிடையில் பேதமே கிடையாது. இவ்விடத்தில் எவ்வித முரண்பாட்டிற்கும் இடமில்லை. ஒரு மந்திரத்தால் ஒரு தேவதையைத்தான் உபாஸிக்க வேண்டும் என்ற நியமம் இல்லை. ஒரே மந்திரத்தாலேயே அநேக தேவதைகளை உபாஸிக்கலாம் என்பதற்கு சாஸ்திரத்திலும் ஆதாரமிருக்கிறது. ஏனென்றால் ஒரே புருஷ சூக்தத்தினால் சிவன், விஷ்ணு முதலான அநேக தேவதைகளின் ஆராதனை செய்யப்படுவதைக் காணலாம். இவ்விடத்தில் காயத்ரீக்கு ஸவிதா முதலான நான்கு தேவதைகள் உண்டு என்று சாஸ்திரம் நிரூபணம் செய்கின்றது. அந்த சாஸ்திரத்தை அர்த்த நிரூபணம் செய்யும்பொழுது எடுத்துக் காண்பிக்கப்படும். உபாஸகர்களுடைய புத்தியின் ஏற்றக் குறைவை அனுசரித்து தியானம் செய்வதற்கு அனுகூலமாக சாஸ்திரத்தில் ஒரு மந்திரத்திற்கு நான்குவித அர்த்த நிரூபணம் செய்யப்பட்டிருக்கிறது என்பது தத்துவமாகும்.

---

11. ப்ர.ஸா. 6.2.

"யோ தேவஸ்ஸவிதாஸ்மாகம் தியோ தர்மாதிகோசரா:
ப்ரேரயேத் தஸய யத்பாகஸ்தத் வரேண்யமுபாஸமைஹே."[12]

என்ற ஸ்மிருதியின்படி காயத்ரீயில் இருக்கும் பதங்களை "ய: ந: திய: ப்ரசோதயாத் (தஸ்ய) தேவஸ்ய ஸவிது: தத் வரேண்யம் பர்க: தீமஹி" என்று அன்வயப் படுத்தலாம் இங்கு 'யத்' சப்தத்திற்குப் பொருத்தமாக 'தஸ்ய' என்ற ஆரும் வேற்றுமையுருபை சேர்த்துக் கொள்ள வேண்டும்.

முதலாவது பொருள்:

தேவஸ்ய: பிரகாசித்துக்கொண்டிருக்கின்ற, ஸவிது: சூர்யனுடைய, 'ஸவித்ரு' சப்தமானது சூர்யனிடத்தில் பிரசித்தமானதே. பர்க: தேஜஸ். 'பர்க' என்ற சப்தம் ஸகாரத்தில் முடிவடைவதாகும். தீமஹி - தியானம் செய்கின்றோம். எப்பேர்ப்பட்ட தேஜஸ் என்றால் 'தத்' - அந்த பிரசித்தமான தேஜஸ். ஸமஸ்த ஜீவஜாலங்களுக்கும் சூர்யனுடைய தேஜஸ் தான் கண்கூடாகவே நாள்தோறும் அனுபவிக்கப்படுகிறது. ஆகவே அந்த தேஜஸ்ஸை த்யானிப்பது மக்களுக்கு மிக எளிதானதாக இருக்கிறது.

எந்த வஸ்துவானது எவனால் பிரசித்தமாக அனுபவிக்கப் படுகிறதோ அதை அவனுக்கு எளிதில் தியானிக்க முடிகிறது. பொருளின் உருவம் தெரியாமல் தியானம் செய்ய முடியாது. கண்கூடாக இருக்கும் பொருளை தியானம் செய்ய இயலாதவராலும் கூட நன்றாகக் காணமுடியும். கிரமமாக அனுபவம் திடமாகும்பொழுது தியானம் செய்யவும் முடியும். ஆகையால் எல்லோருக்கும் கண்கூடான சூர்யனின் தேஜஸ்ஸானது எளிதில் தியானம் செய்யக் கூடியதாகும் என்பது கருத்து. இக்காரணம் கொண்டே இந்த அர்த்தம் முதலில் சொல்லப்படுகிறது. 'வரேண்யம்'- பிரார்த்திக்கத் தக்கது. ஸமஸ்த கர்மங்களுக்கும் உபாஸனைகளுக்கும் விரும்பத் தகுந்த பலம் யாதுண்டோ அதுவே அதன் உருவமாகும்.

சவிதாவின் உருவமே எல்லாச் செயல்களுக்கும் பலமாக இருக்கிறது என்று சாந்தோக்யோபநிஷத்தில் மூன்றாவது அத்தியாயத்திலுள்ள மதுவித்யையில் சொல்லப்படுகிறது. ஸவித்ருமண்டலத்தில் கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு,

---

12. அகஸ்த்ய: (ஸ்ம்ரு.மு. ஆ.கா.)

மேல்பாகம் என்ற ஐந்திடங்களிலும் வரிசையாக வஸு, ருத்ர, ஆதித்ய, மருத், ஸாத்ய என்ற பெயருள்ள ஐந்து தேவ கணங்களால் அனுபவிக்கப் படுகிறதும் ரிக், யஜுஸ், ஸாமம், அதர்வம், உபநிஷத் என்றும் வேத பாகங்களை அடிப்படையாகவுடைய ஐந்து விதமான கர்மங்களுக்கு பலமாகவும் சிவப்பு, வெண்மை, கருமை, கரும் கறுப்பு, எல்லாம் கலந்த நிறம் ஆகிய ஐந்து அமிர்தமானது தீவிரமாக கர்ம மார்க்கத்தில் ஈடுபாடுள்ள கர்மிகளுறகு அடையத் தகுந்ததாக உபதேசிக்கப்படுகின்றது. இவ்விடத்தில் பிரஸித்தியைச் சொல்லுகின்ற 'தத்' பதத்தாலும் பலத்தைச் சொல்லுகின்ற 'வரேண்யம்' பதத்தாலும் தேஜஸ்ஸை வர்ணிப்பதால் ஸமஸ்த கர்ம பலமான ஸவித்ருரூபம் யாதுண்டோ அது எல்லா உயிர்களுக்கும் பிரசித்தமாக இருக்கிறது என்று வேதமே தெரிவிக்கிறது. அதனாலேயும் வைதிக தர்மங்களுக்கு பலமுண்டு என்பதில் நம்பிக்கைக் குறைவோ, இந்த பலம் கிடைக்காது என்றோ சொல்ல முடியாதென்று அறியப்படுகிறது. இதனால் ஆதிதெய்விக பலமான ஸவித்ருஸ்வரூபம் சொல்லப்பட்டது. இப்பேர்ப்பட்ட யாதொரு ஸவிதாவினுடைய தேஜஸ் உண்டோ அதை தியானம் செய்கின்றோம் என்பது கருத்து.

மூன்றாவது பாதத்தில் 'தியः' என்பது ஸவிதாவை மிகைப்படுத்துகிறது. 'யः'-ஸவிதா. இந்த இடத்தில் புல்லிங்கமான 'யத்' என்ற சொல் ஸவிதாவைக் குறிக்கிறது; 'பர்கः' என்ற சொல்லையல்ல. 'பர்கः' சப்தம் நபும்ஸகலிங்கமான படியால் 'சவித்ரு' சப்தத்துடன்தான் அன்வயம், 'நः'- கர்மத்திலும் உபாஸனத்திலும் அதிகாரிகளான எங்களுடைய, 'தியः' புத்தி விருத்தியை, 'ப்ரசோதயாத்'- தூண்டுகிறது. பிரகாசத்தைக் கொடுப்பதனால் விருப்பமுள்ளதும் விருப்பமில்லாததுமான பொருட்களில் கண்களால் ஏற்படக்கூடிய அறிவுகளை உண்டு பண்ணி எங்களை அனுகிரகம் செய்கிறார் என்பது கருத்து. ஸவிதாவினுடைய பிரகாசமில்லாவிட்டால் நமக்கு உருவஞானம் கண்ணிற்கு புலனாகாது. இதனால் ஸவிதாவினுடைய ஆத்யாத்மிகமும் கண்களை அனுகிரகிக்கும் தன்மையுள்ள ரூபமும் கூறப்பட்டதாக ஆகிறது. "ஆதித்யஸ்சக்ஷுர் பூத்வா அக்ஷிணீ ப்ராவிசத்"[13] (சூர்யன் கண்ணாகி நேத்ரங்களை பிரவேசித்தது) என்று வேதமும் கூறுகிறது. ஆகவே எல்லா பிராணிகளுடைய சக்ஷுஸ்ஸையும் அனுக்ரஹம் செய்

13. ஐ.உ. 1.2.4.

கிற அத்யாத்மமும் எல்லா கர்மங்களுக்கும் பலமாயும் பிர ஸித்தமாயும் அதிதைவதமாயுமுள்ள ஸவிதாவினுடைய தேஜஸ்ஸை தியானம் செய்வோமென்று கருத்து.

ரிகாதிபஞ்சவேதபாககர்மஜாம்ருதஸ்புரத்
யதிஷ்டவஸ்துத்ருஷ்டிஹேதுரீக்ஷணாதிதைவதம்
ஸமஸ்தலோகத்ருஸ்யமானமத்புதப்ரபாபரம்
ஸதாபி தத்விபாவயாமி சௌரமுத்தமம் மஹ:.

''ரிக் முதலான ஐந்து வேத பாகத்திலுள்ள கர்மஜன்ய மான அம்ருதப் பெருக்குள்ளதும் இஷ்ட வஸ்துக்களுடைய பார்வைக்கும் காரணமானதும் கண்களுக்கு அதிதெய்வதமும் எல்லா ஜனங்களுக்கும் பிரத்யக்ஷமாயும் மிக ஆச்சர்யமாயு முள்ள தேஜஸ்ஸையுடையதுமான யாதொரு சூர்யனுடைய உத்தமமான தேஜஸ் உண்டோ அதை எப்பொழுதும் தியா னம் செய்கிறேன்.

இரண்டாவது பொருள் :

ஸவிதா என்றொரு தேவன் நமக்கு ஆராதிக்கத் தகுந்த வராக இருக்கிறார். தேஜோமயமான அவருடைய மண்டலம் எல்லா உயிர்களுக்கும் கண்கூடாகவே இருக்கிறது. அவ்வித மிருந்தாலும் இந்த ஸவிதா என்ற தேவன் காயத்ரீ மந்திரத் திற்கு அர்த்தமாக ஆவதில்லை. பின் எப்படியென்றால் அந்த ஸவிதாவுக்கும் விரும்பத் தகுந்த யாதொரு அந்தர்யாமி இருக்கிறரோ அவரே காயத்ரீக்குப் பொருளாக இருக்கிறார் என்பது உசிதமாகும். இந்த மந்திரத்தில் 'ஸவிது:' என்ற பதத்திற்கு அருகிலிருக்கிற 'வரேண்ய' பதத்துடன்தான் சம் பந்தம் பொருத்தமாகும், 'பர்க்க' சப்தத்துடன் எட்டியிருப் பதால் பொருந்தாது. ஆகவே ஸவிதாவாலும் விரும்பத்தகுந்த ஓர் ஒளிமயமான உருவமே மந்திரத்திற்கு அர்த்தமாகக் கொள்ளுவது பொருத்தமாகும். ஸவிதாவோ அவரது மண்டலமோ அல்ல என்று தெரிய வருகிறது. மேலும் சகல உயிர்களின் புத்தி விருத்திகளுக்கு பிரேரகனாக இருக்கும் தன்மையும்கூட ஸவித்ரு தேவனுக்கு பொருத்தமாகாது. ஸவிதாவோவென்றால் கண்களுக்கு அனுகிரகம் செய்கின்ற வன். சக்ஷுரிந்த்ரிய வ்ருத்திக்கு மட்டும் ப்ரேரகனாக இருந்து கொண்டிருந்தாலும் எல்லா புத்தி பரிணாமங்களுக்கும் தூண்டு பவனாக ஆகமாட்டான். காயத்ரீ மந்திரமும் 'தியோ யோ ந:' என்று சமஸ்த புத்தி வ்ருத்திகளுக்கும் பிரேரகரான தேவனைக்

கூறுகிறது. சக்ஷுரிந்திரிய விருத்தி பிரேரகனை மட்டும் கூறுவதில்லை. நமக்குள் எப்படி ஓர் அந்தர்யாமி இருக்கின்றானோ அவ்விதமே ஸவிதா என்ற சூர்யனுக்கு அந்தர்யாமியாக ஒரு தேவர் இருந்து வருகிறார். "ய ஆத்மனி திஷ்டன், ஆத்மனோऽந்தரோ யமாத்மா ந வேத, யஸ்யாத்மா சரீரம், ய ஆத்மானமந்தரோ யமயதி, ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:"[14] (எந்த தேவன் ஆத்மாவில் இருந்துகொண்டு ஆத்மாவிற்கும் உள்ளில் இருக்கின்றவனாய், எந்த தேவனை ஆத்மா அறியவில்லையோ, எந்த தேவனுக்கு ஆத்மா சரீரமோ, எந்த தேவன் ஆத்மாவை உள்ளில் அடக்கி ஆள்கிறானோ அந்த அந்தர்யாமியான உனது ஆத்மா மரணமற்றது) என்று வேதம் கூறுகிறது. "ய ஆதித்யே திஷ்டன் ஆதித்யாதந்தர:, யமாதித்யோ ந வேத, யஸ்யாதித்ய: சரீரம், யமாதித்யமந்தரோ யமயதி, ஏஷ த ஆத்மாந்தர்யாம்யம்ருத:"[15] (யாதொரு தேவன் ஆதித்யனில் இருந்துகொண்டு ஆதித்யனுக்கும் உள்ளில் இருக்கின்றவனாய், எந்த தேவனை ஆதித்யன் அறியவில்லையோ, எந்த தேவனுக்கு ஆதித்யன் சரீரமோ, எந்த தேவன் ஆதித்யனை உள்ளில் அடக்கி ஆள்கிறானோ இந்த அந்தர்யாமியான உனது ஆத்மா மரணமற்றது) என்று ஆதித்யனுக்கும் அந்தர்யாமியாய் ஒரு தேவன் இருப்பதாக வேதம் கூறுகிறது. மனிதர்களிடத்திலும் தேவர்களிடத்திலும் அந்தர்யாமிக்கு வேறுபாடு கிடையாது. "யஸ் சாயமஸ்மின் ஆதித்யே தேஜோமயோऽம்ருதமய: புருஷ: அயமேவ ஸ யோऽயமாத்மா இதமம்ருதம், இதம் ப்ரஹ்மா, இதம் சர்வம்."[16] (இந்த ஆதித்யனிடத்தில் தேஜோமயனாயும் அமிர்தசொரூபனாயும் யாதொரு புருஷன் இருக்கிறானோ அவன் தான் இந்த ஆத்மா. இது அமிர்தம், இது ப்ரஹ்மம், இது சர்வம்) என்று ஆதித்யனிடத்திலும், ஜீவனிடத்திலும் அந்தர்யாமி ஒருவனே என்று வேதம் மேலும் மேலும் கூறுகிறது. அந்த அந்தர்யாமியான பகவான் ஸ்ரீமந் நாராயணனே. இந்த காயத்ரீ மந்திரமும் அந்த நாராயணனையே விளக்கிக்கூறுகிறது. இவ்விடத்தில் 'பர்க்க:' என்ற சப்தமானது தேஜஸ்ஸைக் கூறுகின்றபடியால் ஆதித்யனுக்கும் அந்தர்யாமியான ஸ்ரீமந் நாராயணன் ஜோதிசொரூபன் என்று தெளிவாகிறது. பிரசித்தியைக் கூறுகின்ற 'தத்' சப்தம்

---

14. ப்ரு.உ. 3.7.22., மாத்யந்தினபாட:.

15. ப்ரு.உ. 3.7.9.

16. ப்ரு.உ. 2.5.5.

அந்த ஜோதிசொரூபிக்கு உபநிஷத்தில் பிரசித்தமாயிருக்கும் தன்மையை காட்டுகிறது. 'அத ய ஏஷோ(அ)ந்த்ராதித்யே ஹிரண்மய: புருஷோ த்ருஸ்யதே ஹிரண்யச்மஸ்ருர் ஹிரண்ய-கேச ஆப்ரணகாத் ஸர்வ ஏவ சுவர்ண:. தஸ்ய யதா கப்யாஸம் புண்டரீகமேவமக்ஷிணீ'[17] (ஆதித்ய மண்டலத்திற்குள் யாதொரு தங்கமயமான புருஷன் காணப்படுகிறானோ உபாஸகர்களுக்கு அவருடைய சரீரமும் முக ரோமங்களும் தலை ரோமங்களும் நகம் முதல் எல்லா அவயவங்களுமே தங்க நிறமாகவிருக்கிறதோ அவருடைய கண்கள் குரங்குகளின் ஆஸனம் போன்ற சிவப்பான தாமரைப் பூ போல் இருக்கின்றதோ) என்று இவ்வாறு ஆதித்யனுக்கு அந்தர்யாமியாக இருக்கும் ஜோதிஸ்வரூபன் ஸ்ரீமந் நாராயணன் என்று சாந்தோக்யோ பநிஷத்தில் கூறப் பட்டிருக்கிறது. அவ்விடத்தில் எல்லாமே சுவர்ணம் என்று கூறுவதால் ஸமஸ்த்த அவயவங்களும் ஜோதி ஸ்வரூபமாக இருக்கும் தன்மை ஆதித்யாந்தர்யாமிக்குச் சொல்லப்படுகிறது. எவ்விதம் செந்தாமரை சிவப்பாக இருக்கிறதோ இப்படி கண்கள் இருக்கிறது என்பதால் அந்த ஆதித்யாந்தர்யாமிக்கு புண்டரீகாக்ஷத்வம் ஸித்திக்கிறது. ஸ்ரீமந் நாராயணனுக்கு புண்டரீகாக்ஷத்வம் பிரசித்தமானது. பகவான் ஸ்ரீ நாராயணனுக்கு புண்டரீகாக்ஷன் என்ற பெயரும் பிரசித்தமே 'கோவிந்த: புண்டரீகாக்ஷ:'[18] என்று அமர கோசத்தில் சொல்லப்பட்டிருக்கின்றது.

"த்யேய: ஸதா ஸவித்ருமண்டலமத்யவர்த்தீ
நாராயண: ஸரஸிஜாஸநஸன்நிவிஷ்ட:
கேயூரவான் மகரகுண்டலவான்
கிரீடீ ஹாரீ ஹிரண்மயவபு: த்ருததசங்கசக்ர:"[19]

(சூரிய மண்டலத்தின் மத்தியில் பத்மாசனத்தில் அமர்ந்திருப்பவனும் கேயூரம், மகரகுண்டலம், கிரீடம், முத்துமாலை இவற்றை அணிந்திருப்பவனும் சுவர்ணமயமான சரீரமுள்ளவனும் சங்கு சக்ரதாரியுமான நாராயணனை எப்பொழுதும் தியானிக்க வேண்டும்) என்று ஸ்மிருதி இருப்பதனால் காயத்ரீ ஸ்ரீமந்

---

17. சா.உ. 1.6.6.7.

18. அ.கோ. 1.1.19.

19. பவிஷ்யோத்தரபுராணே ஆதித்யஹ்ருதயஸ்தோத்ரம் 155.

நாராயணனையே குறிக்கிறது என்று தெரியவருகிறது. "ய:"- சுவர்ண ரூபமான உடலைக் கொண்டிருக்கும் தன்மையால் உபநிஷத் பிரசித்தனான யாதொரு ஸ்ரீமந் நாராயணன் இருக்கின்றானோ, 'ந:'- நம் எல்லோருடையவும், 'திய:'- எல்லா புத்தி விருத்திகளையும், 'ப்ரசோதயாத்' - அந்தர்யாமியாக இருந்து கொண்டு தூண்டுகிறானோ, 'தத்'- அப்பேர்ப்பட்ட, 'தேவஸ்ய சவிது':- ஆதித்யனுடைய, (இது சமஸ்த தேவர்களையும் குறிக்கின்றது.) 'வரேண்யம்' - விரும்பத்தகுந்த, சர்வாந்தர்யாமியும், அத்யாத்மமாகவும், அதிதெய்வமாகவும், சமஸ்த ஜீவ கோடிகளையும் தூண்டுபவனும் ஆக உள்ள, 'பர்க:'- தேஜோ ரூபியான ஸ்ரீமந் நாராயணனை, 'தீமஹி'- நாம் தியானிக்கின்றோம். ஆகவே சூரிய மண்டலத்திலும் தனது இருதய குகையிலும் முன் கூறப்பட்ட இலக்ஷணங்களோடு கூடிய ஸ்ரீமந் நாராயணன் தியானம் செய்ய தகுந்தவன் என்பது கருத்து.

> உத்தப்தஸபுடஹாடகதயுதிபரைருத்யோதமானங்ககம்
> புல்லத்ரகத்தசரோஜசாருநயனம பூர்ணேந்துபிம்பானநம
> ஆதிதயாதிஸமஸ்ததைவதகணஸயாஸ்மாகமப்யாந்தரம
> தீவ்ருத்திபரசயப்ரசோதகமிமம த்யாயாமி நாராயணம்.

புத்துருக்கிய தங்கம் போன்ற பிரகாசம் மிகுந்த சரீரமும், மலர்ந்த செந்தாமரை போன்ற கண்களும், பூர்ண சந்திர பிம்பமொத்த முகமுள்ளவரும், ஆதித்யன் முதலான ஸமஸ்த தேவகணங்களுக்கும் நமக்கும் உள்ளிருப்பவரும் புத்தி விருத்திகளை தூண்டிக் கொண்டிருப்பவருமான நாராயணனை நான் தியானிக்கிறேன்.

மூன்றாவது பொருள்:

ஆதித்யனுக்கும் அந்தர்வர்த்தியாயும் தேஜோ ரூபமாயும் யாதொரு வஸ்த்து கூறப்பட்டதோ யாதொரு வஸ்து அத்யாத்மமாகவும் அதிதைவதமாகவும் அந்தர்யாமி ரூபமான இவ்விரண்டும் பார்வதிதேவி சமேதனான பகவான் பரமசிவனுடைய ரூபம் என்றும் சுருதி ஸ்மிருதிகளால் அறியப்படுகிறது. தைத்திரீய ஆரண்யகத்தில் "ஆதித்யோ வா ஏஷ ஏதன்மண்டலம் தபதி......"[20] இது முதலான மந்திரங்களால் ஆதித்யமண்டலத்திற்குள் இருக்கின்ற புருஷனை என்று துவங்கி 'அந்த புருஷனுக்கு எல்லாம் அவருடைய சொரூபமே' என்று சொல்லிவிட்டு; 'சத்யோஜாதம்' முதலிய பரமசிவனுடைய

---

20. தை.ஆ. 10.12.

மூர்த்தி விசேஷங்களை பிரதிபாதனம் செய்கின்ற ஐந்து பிரஹ்ம மந்த்ரங்களைக் கூறியபிறகு "நமோ ஹிரண்யபாஹவே ஹிரண்யவர்ணாய ஹிரண்யரூபாய ஹிரண்யபதயே அம்பிகாபதய உமாபதயே பசுபதயே நமோ நம:"[21] என்று கூறுகிறது. இவ்விடத்தில் தங்க நிறமுள்ளவனும் ஆதித்யனுக்குள் இருப்பவனுமான புருஷனுக்கு பரமசிவனுக்கே ஏற்றதான உமாபதியாயிருக்கும் தன்மை முதலியவைகளான உருவம் தெளிவாக உபதேசிக்கப்படுகிறது. அப்படியே சதருத்ரீயத்தில்,

"அஸௌ யோ/வஸாபதி நீலக்ரீவோ விலோஹித:
உதைனம கோபா அதருசனநதருசன நுதஹாாய:
உதைனம விச்வா பூதானி ஸ தருஷ்டோ மருடயாதி ந:"[22]

பகவான் நீலகண்டனே இடையர்கள் போன்ற ஜனங்களையும் ஒன்றுமே அறியாத பெண்களையும் தனது தரிசனத்தைக் கொடுத்து தானாகவே அனுக்ரஹம் செய்வதற்கு நாள்தோறும் ஆதித்ய ரூபத்தில் உதயமாகிறார் என்று நன்றாக சொல்லப்பட்டிருக்கிறது. இவ்வாறு மற்ற சுருதிகளிலிருந்தும் அறிந்து கொள்ளவும்.

சாந்தோக்யோபநிஷத்திலோ வென்றால் சுவர்ணமயமான உருவம் மட்டும் ஆதித்யனுக்குள்ளிருக்கும் புருஷனுக்கு உபன்யாஸிக்கப் பட்டிருக்கிறது. இதல்லாமல் சிவனுடையவோ விஷ்ணுவினுடையவோ அசாதாரணமான ஓர் உருவமும் அங்கு சொல்லப்படவில்லை. புண்டரீகாக்ஷனென்று விஷ்ணுவுக்குப் பெயர் என்று அங்கு சொல்லப்படவில்லை. "யதா புண்டரீகமேவமக்ஷிணீ" என்ற வாக்யத்தில் த்விவசனாந்தமான அக்ஷிபதத்தால் இரண்டு கண்களை சொல்லிவிட்டு அவ்விரண்டு கண்களுக்கும் மலர்ந்த தாமரைப் பூவை ஒப்பிட்டுதான் வர்ணிக்கப் பட்டிருக்கிறது. அதுவும் கூட முக்கண்ணனான பகவான் பரமேசுவரனிடத்திலும் பொருத்தமாகவே இருக்கிறது. மூன்றாவது கண் மூடியிருப்பதால் பரமசிவனின் இரண்டு கண்களுக்கு மட்டும் மலர்ந்த தாமரைப் பூவின் உவமை சம்பவிக்கும். மேலும் காயத்ரீ

---

21. தை.ஆ. 10.22.
22. தை.ஆ. 4.5.1.3.

மந்திரத்திலுள்ள 'பர்க' சப்தம் அகாராந்தமே; ஸகாராந்தம் இல்லை. அதுவும் பரமசிவனுக்கு அசாதாரணமான பெயரா கும். ''ஹர: ஸ்மரஹரோ பர்க:''[23] என்கிறது அமரகோசம். இந்த பர்க சப்தம் ''தியோ யோ ந:'' என்ற மூன்றாவது பாதத்திலுள்ள 'யத்' சப்தத்துடன் விசேஷமாகப் பொருந்து கிறது.

> ''தேவஸ்ய ஸவிதுர் மத்யே யோ பர்கோ நோ திய: ஸ்வயம்
> ப்ரசோதயாத் தத்வரேண்யம தீமஹீத்யனவயக்ரம:.''[24]

என்று ஸ்மிருதியும் இருக்கின்றது. இப்படி சவித்ரு மண்டலத்தில் ஹிரண்ய ரூபனாய், மலர்ந்த தாமரைக்கு ஒப்பான இரு கண்களை உடையவனாய், சுருதிகளில் பிரஸித்தனாயிருக்கின்ற பர்கன் (பரமசிவன்) நம் எல்லோருடைய புத்திவிருத்திகளை தூண்டுவிக்கட்டும். எல்லோராலும் ப்ராத்திக்கத் தகுந்த பகவான் பரமசிவனை தியானம் செய்வோம் என்று பொருள். ஆகவே முன் கூறிய இலக்ஷணங்களோடு கூடிய பகவான் பரமசிவன் காயத்ரீ மந்த்ரத்திற்கு உபாஸ்ய தேவதை என்று கருத்து.

> உத்புல்லாருணபுண்டரீகஸாத்ருஷமாஸமரஜ்ஜதக்ஷித்வயம
> நிர்ம்ருஷடத்ருதஹேமநிரமலதனும நீலாம்புதாபம் கனே
> உத்[25] ஸம்ஜ்ஞகமுமாஸநாதமுடுராட் கோணவதம்ஸம நருணாம்
> அந்தர்யாமிணமர்கமணடலகதம பர்கம் ஸதா பாவயே.

''சிவப்பு நிறமுள்ள மலர்ந்த தாமரையின் காந்தியால் பிரகாசிக்கின்ற இரண்டு கண்களை உடையவரும் உருக்கிய தங்கம்போல் சுத்தமான திருமேனியை உடையவரும் கழுத்தில் நீருண்ட மேகம் போன்ற நிறத்தை உடையவரும் 'உத்' என்ற பெயரை உடையவரும், உமையோடு கூடியவரும் பிறைச் சந்திரனை அலங்காரமாகக் கொண்டவரும் மனிதர்களுக்கு அந்தர்யாமியாக இருப்பவரும் சூரிய மண்டலத்தி லிருப்பவருமான பரமசிவனை நான் எப்பொழுதும் தியானம் செய்கிறேன்.''

---

23. அ.கோ. 1.1.33., cf. ரிக். 10.61.14.
24. நிருக்தபாஷ்யே, q. by ஸ்ம்ரு.மு.ஆ.கா.
25. சா.உ. 1.6.6.7.

நான்காவது பொருள் :

காயத்ரீ மந்திரத்தால் உபாஸிக்கத் தகுந்த விஷ்ணு வினுடையவோ, சிவனுடையவோ தங்கமயமும் அந்தர்யாமி யுமான ரூபமானது முன் விரிவாகக் கூறப்பட்டது. அவ்விடத் தில் சிறிது சிந்திக்க வேண்டியிருக்கிறது. ஆதித்ய மண்டலத் திலிருக்கின்ற சுவர்ண மயமான ரூபம் அதே ரூபத்துடன் நமது புத்தியைத் தூண்டுகின்றதா? அல்லது மற்றொரு ரூபத் திலா? அதே ரூபத்துடன் நமது புத்தியைத் தூண்டும் தன்மை ஏற்படாது. அந்த ரூபத்திற்கு நமது உடலுக்குள் பிரவேசிப் பதும் இயலாததன்றோ? ஜோதிர்மய ரூபத்திற்கோ என்றால் ஓர் உடலிலிருந்து மற்றோர் உடலுக்கு மாறுவது ஒரு பொழு தும் சம்பவிக்காது. ஆனால் ஈசுவர சம்பந்தமான மற்றொரு ரூபமே நமது இருதய குகையில் அந்தர்யாமியாக பிரகாசிக் கின்றது என்று சொல்வது உசிதமாகும். அந்தர்யாமிக்கு ஏவுதலுக்கு தகுந்தவனுடைய சரீரத்தைக் காட்டிலும் வேறு சரீரம் தனியாகி இல்லையல்லவா? அந்தர்யாமி ப்ராம்மணத் தில் 'யஸ்ய ப்ருதிவீ சரீரம், 'யஸ்ய ஆப, சரீரம், 'யஸ்ய ஆதித்ய: சரீரம்'[26] (எவனுக்கு பூமி சரீரமோ, எவனுக்கு ஜலம் சரீரமோ, எவனுக்கு ஆதித்யன் சரீரமோ) என்று இவ் விதமாக ஒவ்வொரு பரியாயத்திலும் ஏவத் தகுந்த பூமி முத லியவைகளே அந்தர்யாமிக்கு சரீரம்; இவைகளைக் காட்டி லும் வேறாக சரீரம் அந்தர்யாமிக்குக் கிடையாது என்று தெளிவாக சொல்லப் பட்டிருக்கிறது. ஆகவே சரீரமற்ற பர மாத்மாவே எல்லா பூதங்களிடத்திலும் அந்தர்யாமியாக இருக்கின்றார் என்று அறியப்படுகிறது. சரீரமில்லாததால் அந்த அந்தர்யாமியிடத்தில் விஷ்ணுவினுடையவோ சிவனு டையவோ உண்மையான ஏதாவது ரூபத்தை கற்பனை செய்ய முடியாது. அவரேதான் சரீரமில்லாதவராக இருந்து கொண்டு எல்லா ஜீவிகளின் புத்தியாகிய குகையில் வாசம் செய்துகொண்டு இருக்கிற பரமாத்மா காயத்ரீ மந்திரத்தால் விளக்கப்படுகிறார்.

"உத்யந்தமஸ்தம்யந்தமாதித்யமபித்யாயன்"[27] (உதிக் கின்றவனும் மறைகின்றவனுமான சூரியனை தியானித்துக் கொண்டு என்று த்யானத்தை விதிக்கின்ற வேதமும்) கூட

26. ப்ரு.உ. 3.7.3,4,9.

27. தை ஆ. 2.2.

"ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யே"[28] (பிரம்மமாகவே இருந்து கொண்டு பிரம்மத்தை அடைகிறது) என்று பிரம்மபாவத்தை அடைவதுதான் தியானத்தின் பலன் என்றும் காயத்ரீயால் உபாசிக்கத் தக்கது பரமாத்மாவே என்றும் தெளிவாகத் தெரிவிக்கின்றது.

ஒரு வஸ்துவை தியானம் செய்து மற்றொரு வஸ்துவை அடைவது பொருத்தமில்லை அல்லவா? ப்ரம்மத்தை உபாசிக்கின்றவன் ப்ரம்மத்தையே அடைகின்றான் என்பது மிகவும் பொருத்தம். சிவ ரூபமும் விஷ்ணு ரூபமும் பரமாத்மாவின் ரூபமேதான். அவ்விதமிருந்தாலும் அந்த ரூபமானது உபாசகர்களை அநுகிரகம் செய்வதற்காக மாயா சம்பந்தத்தினால் எடுத்துக் கொள்ளப்பட்டது. அது பரமாத்மாவினுடைய உண்மையான ரூபமல்ல இவ்விடத்திலோ வென்றால் பரமார்த்தமான ப்ரம்மமே மந்திரத்தால் போதிக்கப்படுகிறது. ஆகையினாலேயே "ப்ரஹ்மைவ ஸன் ப்ரஹ்மாப்யேதி"[28] என்ற இடத்தில் உபாசகனுக்கு ப்ரம்ம பாவம் முன்பே சித்தமாக இருப்பதைக் காண்பிக்கிறது. உண்மையாகவே சித்தமான ப்ரம்மபாவம் அஞ்ஞானத்தால் மூடப்பட்டு பிறகு ஞானத்தால் அடைகிறான் என்பது தத்துவம்.

மந்திரத்திலிருக்கும் 'பர்க' சப்தம் அகாராந்தமாகவோ ஸகாராந்தமாகவோ இருக்கலாம். இரண்டு பக்ஷத்திலும் பிரகாசிக்கும் தன்மையே அதன் அர்த்தமாகும். அதுவும் முக்கியமாக ஆத்ம சைதன்யத்திற்குத்தான் சம்பவிக்கும்; மற்றதற்கு சம்பவிக்காது. ஆதித்யன் முதலான பாஹ்யமான ஜோதிஸ்ஸிற்கோ கண் முதலான கரண சமூகங்களுக்கோ சரீரத்தை ஆச்ரயித்திருப்பதற்கு எல்லாவற்றையும் பிரகாசிப்பிக்கும் தன்மை இல்லை. கனவில் ஆத்மா சைதன்யத்தாலேயே பிரகாசம் ஏற்படுகிறது. ஆத்மாவைத் தவிர வேறொன்றாலும் கனவில் ப்ரகாசம் ஏற்படாது. "தமேவ பாந்தமனுபாதி ஸர்வம்"[29] (பிரகாசிக்கின்ற அதனைத் தொடர்ந்துதான் மற்றவையெல்லாம் பிரகாசிக்கின்றது) என்று வேதம் கூறுகிறது. ஸுஷுப்தியிலோ சமாதியிலோ ஆதித்யாதிகளின் இருப்பில் சந்தேகம் கிடையாது ஆகையால் எங்கும் வியாபகமானதும் இயற்கையாகவே பிரகாசிக்கின்றதும் சைதன்ய

---

28. தை.ஆ. 2 2.

29. க உ. 2.2.15; மு.உ. 2. 2.10.

ஜோதிசொரூபியுமான பிரம்மம்தான் காயத்ரீ மந்திரத்தால் விவரிக்கப்படுகிறது என்பது மிகவும் பொருத்தமாகும். இது பற்றிய ஸ்மிருதியை பின்னால் உதாரணமாக எடுத்துக் காட்டுவோம்.

இனி மந்திரத்திற்கு பொருள் எழுதப்படுகிறது. இந்த காயத்ரீ மந்திரத்தின் மூன்றாவது பாதத்தினால் சுத்தமான அஹம்பதார்த்தம் (ஜீவன்) பிரத்யகாத்மாவில் (பிரம்மத்தில்) சமர்ப்பிக்கப்படுகின்றது. "தேவஸ்ய ஸவிதுர் வரேண்யம்" என்பது சுத்தமான தத்பதார்தத்தை[30] (பரமாத்மாவை) குறிக்கின்றது. யத் பத, தத் பதங்களால் பிரத்யகாத்மாவிற்கும் தத் பதார்த்தத்திற்கும் ஐக்யம் அனுபவயோக்யமாக 'தீமஹி' என்ற பதத்தால் அனுஸந்தானம் செய்யப்படுகிறது.

'ந:'- மனிதன் முதல் அசையாப் பொருள் வரையுள்ள ஜீவாத்மாக்களுடைய. இவ்விடத்தில் 'ந:' என்பதால் அகம்-ப்ரத்யயங்களுக்கு விஷயங்களான க்ஷேத்ரம், க்ஷேத்ரஜ்ஞன் இவைகளுடைய ஸமுதாய ரூபமான ஆத்மாக்கள் காண்பிக்கப்படுகின்றன. 'திய:' விஞ்ஞானங்கள், இது எல்லா மனோ விருத்திகளையும் குறிக்கின்றது. ஆகையால் சுகம், துக்கம், சோகம், மோகம், ராகம், துவேஷம், ஸம்சயம், நிச்சயம் முதலியவைகளான அளவற்ற பிரிவுகளையுடைய அந்த: கரணத்தின் பரிணமங்கள் எடுத்துக்கொள்ளத் தக்கவைகள். புத்தியின் குணமோவென்றால் பிரேரகனை ஆத்மாவின் நித்யமான பிரகாசத் தன்மையை வெளிப்படுத்துவதற்காகச் செய்யப்படுகிறது. விஞ்ஞானமே விஷயங்களை, பிரகாசப் படுத்துகிறது என்று லௌகிகர்கள் அறிகிறார்கள். தாந்த்ரிகர்களான சிலர் விஞ்ஞானமே விஷயங்களுக்கும் ஆத்மாவிற்கும் பிரகாசம் என்று நினைக்கிறார்கள். ஆத்மாவை குடம் முதலியவை போல் பிரகாசமில்லாததாகவே அவர்கள் அபிப்ராயப் படுகிறார்கள். அதுவும் பொருந்தாது. உற்பத்தி நாசங்களை இயற்கையாகவேயுடைய அநேக விஞ்ஞானங்களுக்கு விஷயங்களை பிரகாசம் செய்துவைக்கும் தன்மை பொருந்தாது. பிரகாச ஸ்வரூபியான ஒரு வஸ்து இல்லாவிட்டால் விஞ்ஞானங்களுடைய உற்பத்தி விநாசங்களுக்கும் அவைகளின் இல்லாமைக்கும் பிரகாசமே இல்லாமல் போய்விடும். அப்பொழுது விஞ்ஞானம் இல்லாததால். மேலும் விஞ்ஞானத்

---

30. மானஸோல்லாஸ:, 3.11.

திற்குத்தான் பிரகாசம் என்று வாதிக்கும் பொழுது நன்றாகத் தூங்குகின்றவனிடத்தில் பிரகாசமே இல்லை. அதனால் விஞ்ஞானமும் இல்லையென்றாகிவிடும். இவ்விதம் விமர்சனம் செய்வதால் விஞ்ஞானத்தால் ஆத்மா பிரகாசிக்கின்றது என்ற விபரீத ஞானம் வெகு தூரம் அகன்றுவிட்டது. ஸுஷுப்தி காலத்தில் விஞ்ஞானம் இல்லாவிட்டாலும் ஸுஷுப்த சாக்ஷியான ஆத்மா ஸ்வபிரகாசமாகவே இருக்கின்றது. ஆத்ம பிரகாசத்துடன் கூடிய விஞ்ஞானம்தான் விஷயங்களை பிரகாசப் படுத்தும் சாமர்த்தியமுள்ளதாக ஆகும். நித்யமான ஆத்ம பிரகாசம் இல்லாவிட்டால் விஞ்ஞானத்திற்கு விஷயங்களை பிரகாசப் படுத்த இயலாது. ஆகவே போதரூபமானதும் உற்பத்தி ஆகும் சமயத்தில் மட்டும் விஷயங்களை விளக்கிக் காட்டும் சாமர்த்தியமுள்ளதுமான எல்லாவித புத்திவ்ருத்திகளையும் யாதொரு வஸ்து ப்ரேரணை செய்துகொண்டு பிரகாசிக்கின்றதோ, அந்த நித்ய பிரகாசமான வஸ்துவே ஜீவ ஸ்வரூபம் என்பதை தெரிவிப்பதற்காக 'திய:' என்று குறிப்பிட்டுச் சொல்லப் பட்டது. எல்லா புத்தி விருத்திகளுக்கும் சாக்ஷி விஷயமான இப்படிப்பட்ட ஆத்மஞானம் தான் மோக்ஷத்திற்கு ஏதுவாக ஆகின்றது. அநித்யமான விஞ்ஞானம் முதலியவைகளில் ஆத்மத்வ புத்தியானது ஆத்மாவிற்கு மோக்ஷ ஏதுவாக ஆகவே ஆகாது. "ப்ரதிபோதவிதிதம் மதமம்ருதத்வம் ஹி விந்ததே"[31] (ப்ரதிபோதத்தால் கிடைத்த ஞானத்தின் மூலம் அம்ருதஸ்வரூபனை பரமாத்மாவை அடைகிறான்) என்று மற்றொரு ச்ருதியும் இவ்விதமே கூறுகின்றது.

'ய:'- ஒரு சித்சொரூபமான ஆத்மா, 'ப்ரசோதயாத்'- தூண்டுகிறது, விஷயங்களுக்கு பிரகாசத்தைக் கொடுக்கின்ற தனது செய்கையை செய்கின்றது, பிரகாசப்படுத்துகின்றது என்பது கருத்து. இவ்விடத்தில் 'ந:' என்றும் 'திய:' என்றும் பன்மையை உபயோகித்திருப்பதால் நான் என்ற அறிவின் விஷயங்களில் உடல், இந்திரியங்கள், அந்த:கரணம் இவைகளுக்குத்தான் பேதம் என்பது அறிவிக்கப் படுகிறது. ஆகையால் பேதத்தைத் தழுவிநிற்கின்ற வர்ணம், ஆச்ரமம், நீ, நான் முதலான அநேக நிமித்தங்களுடைய லௌகிகம், வைதிகம், கர்ம, உபாஸனை முதலான எல்லா விவகாரங்களுக்கும் பேத விஷயத்வம் விவரித்துக் கூறப்பட்டதாக ஆகின்றது. பழக்க வழக்கங்களில் தீர்மான

31. கே. உ. 2.4.

மான உடல், புலன்கள், மனது, அதன் தர்மங்கள் முதலிய வைகளுடைய பேதத்தை ஆச்ரயிக்காமல் ஆத்மாவின் பேதமானது அநேக வர்ஷமானாலும் நிரூபணம் செய்ய இயலாது. ஆத்மாவிற்கு உண்மையாகவே சொரூப பேதத்தை தர்க்க பலத்தால் ஸ்தாபனம் செய்கின்ற தார்கிகர்கள் பேத புத்தி உடையவர்களாய் அகம் புத்திக்கு விஷயங்களான சரீரம், இந்திரியம், அந்த:கரணம், இவைகளையே ஆத்மாவாக பிரமத்தை அடைந்து கூறுகிறார்கள். சரீராதிகளுக்கு பிரகாச மான நித்ய சுத்தமான ஆத்மதத்வத்தை அவர்கள் அறிவ தில்லை. மேலும் 'ந.' என்பதால் பிரகாச விஷயமான க்ஷேத்ர மான சரீராதிகளுக்கும், பிரகாச ரூபமான க்ஷேத்ரஜ்ஞனை சமுதாயத்தை சுட்டிக்காட்டி இவைகளுக்கு நடுவில் பிரகாச மான யாதொரு க்ஷேத்ரஜ்ஞன் உண்டோ; அதைச் சொல்லு கின்ற ஏகவசனந்தமான 'ய:' என்ற பதத்தினாலேயே க்ஷேத் ரஜ்ஞனை சாக்ஷிக்கு ஒன்றாக இருக்கும் தன்மையும் பிரகாசப் படுத்தும் தன்மையும் ய: ப்ரசோதயாத்' என்பதால் சொல்லப்படுகிறது. ஆகவே புத்திவரையுள்ள க்ஷேத்ராம்சங் களுக்கும் இவைகளுக்கு பிரேரகரான க்ஷேத்ரஜ்ஞனுக்கும் ப்ரேரியன் க்ஷேத்ராம்சமென்றும், ப்ரேரகன் க்ஷேத்ரஜ்ஞ னென்றும் பிரித்துக் காட்டப்பட்டது. பிரகாச விஷயத்திற்கும் பிரகாசத்திற்கும் அபேதம் ஸம்பவியாது. சித்ஸ்வரூபமான ஆத்மா ஒன்றுக்கே சுருதியுக்திஸ்ம்ருதிகளாலேயே ஜடமாக க்ஷேத்ரங்களை பிரகாசப்படுத்தும் தன்மை பொருத்தமாக ஆகும் ஆத்மாவிற்கோ பேதமே கிடையாது. க்ஷேத்ரங்கள் வெவ்வேறாக இருந்தாலும் க்ஷேத்ரஜ்ஞன் ஒன்றே. இவ் விதமே உபநிஷத்தும் கூறுகிறது.

> "யதா ஹ்யயம் ஜ்யோதிராத்மா விவஸ்வாநபோ பின்னு
> பஹுதைகோ/னு கச்சன், உபாதினு க்ரியதே பேதரூபோ
> தேவ: க்ஷேத்ரேஷ்வேவமஜோ/யமாதமா."

என்று.

> "யதா ப்ரகாசயத்யேக: க்ருத்ஸ்னம் லோகமிமம் ரவி:
> க்ஷேத்ரம் க்ஷேத்ரீ ததா க்ருத்ஸ்னம் ப்ரகாசயதி பாரத".32

என்று கீதாரூபமான ஸ்மிருதியும் இவ்விதமே கூறுகின்றது.

யோகிகள் ஒரே சமயத்தில் அநேக சரீரத்தை எடுத்துக் கொள்ளும் பொழுது ஒரே ஆத்மாவிற்கு அனேக சரீரத்தை

32. ப.கீ. 13.33

பிரகாசம் செய்து வைக்கும் தன்மையை விருப்பமில்லாதவனும் கூட ஏற்றுக்கொள்ள வேண்டும். ஆகையால் ஆத்மாவிற்கு பேதம் கிடையாது. ஆகவே க்ஷேத்ரஜ்ஞனே பரமாத்மா நித்யசுத்தன் என்பது காண்பிக்கப்பட்டது. அந்த ஆத்மா விற்கு பரமாத்மாவுடன் அபேதத்தை 'தத்' என்ற பதம் கூறு கின்றது. எல்லா சரீராதிகளுக்கும் பிரகாசமான, ஜீவசொரூப மான பிரம்மமே சரீராதிகளில் ஜீவரூபமாக பிரவேசித்திருக் கிறது. "தத் ஸ்ருஷ்ட்வா ததேவானுப்ராவிசத்"[33] (அதை படைத்து அதனுள் நுழைந்து) "ஸ ஏஷ இஹ ப்ரவிஷ்ட:"[34] (இதில் பிரவேசித்திருப்பது அதுவேதான்) முதலிய சுருதிகள் இவைத விளக்குகின்றது.

'ஸவிது:'– உற்பத்தி செய்கிறவனுடைய. சகல உலகத் தின் படைப்பு, நிலை, அழிவு இவைகளை செய்கின்றவரான. 'தேவஸ்ய:'- ஸ்ருஷ்ட்யாதி செய்கைகளால் விளையாடுகின்றவ ரான ஈசுவரனுடைய என்று பொருள். "யோகவத்து லீலா கைவல்யம்"[35] (ஸ்ருஷ்ட்யாதிகள் பரமேசுவரனுக்கு விளையாட் டாகும்) என்று ஸூத்ரமும் இருக்கிறது. இதனால் தத்பதத் திற்கு அர்த்தமான மாயையோடு சேர்ந்த பிரம்மம் விளக்கப் பட்டது. 'தஸ்ய'- அதனுடைய, 'வரேண்யம்'- ப்ரார்த்திக்கத் தகுந்த, அதாவது இந்த மாயா சபளித பிரம்மத்தைக் காட்டி லும் மிகவும் உயர்ந்த உபாதியற்ற நிர்குணப்ரம்மம் என்று ஏற்பட்டது. 'பர்க:'- பாஸகம், சித்சொரூபம் என்று கருத்து. இவ்விடத்தில் 'வரணீயம்' என்பதால் தானாகவே எல்லோரா லும் விரும்பத்தகுந்த எல்லையற்ற ஆனந்த ரூபம் பிரம்ம என்று சொல்லப்பட்டது. ஆனந்தமும் பிரகாசிக்காமலிருந்தால் புருஷார்த்தமாக ஆகாதபடியால் ஆனந்தரூப ப்ரஹ்மத்திற்கு பிரகாசத்துடனிருக்கும் தன்மையான சித்ரூபத்வத்தை பர்க சப்தமானது போதிக்கின்றது ஜகத்காரணமான மாயோ பாதிகமான பரமேசுவரனுக்கும் ஆதாரம் என்பதால் நாசமற்ற ஸத்ரூபத்வம் சொல்லப்பட்டது.

ஆகவே சத்ய, ஞான, ஆனந்த ரூபமானது பிரம்மம் என்று நிரூபணம் செய்யப்பட்டது. மேலும் சுத்தமான ஜீவனுடைய அபேதத்தைப் போதிக்கின்ற 'தத்' பதத்தால் சவித்ரு ரூபத் தை விசேஷணமாகக் கொடுக்காமல் வரேண்ய ரூப விசேஷ

---

33. தை.உ. 2.6.
34. ப்ரு.உ. 1.4.8.
35. ப்ர.ஸூ. 2.1.33.

*ணத்தால் ஜகத் காரணமான மாயோபாதிக பிரம்மமானது ஜீவஸ்வரூபத்தோடு வேறுபாடில்லாதது- என்பது முற்றிலும் பொருந்தாது. பின் மாயோபாதிக பிரம்மத்திற்கும் ஆதார ரூபமானது சுத்த சைதன்யம்தான் என்று ஏற்பட்டது. ''ஸ யச்சாயம் புருஷே, யச்சாஸாவாதித்யே, ஸ ஏக:''[36] (புருஷனிலும் ஆதித்யனிலும் இருக்கிறவன் ஒருவனேதான்) என்று தைத்திரீய உபநிஷத்தில் கூறப்பட்டிருக்கிறது இவ் விதம் ஆத்மாவிற்கும் பிரம்மத்திற்கும் யாதொரு ஐக்யமானது கூறப்பட்டதோ அவ்விதமான அத்விதீய சொரூபத்தை, 'தீமஹி'- தியானம் செய்வோம். இவ்விதம் அத்விதீயமாயும் பரிபூர்ணமாயும் இருக்கின்ற ஆத்மசொரூபத்தின் அநுசந்தானத்தை இந்த காயத்ரீ மகாமந்திரம் உபதேசிக்கின்றது. ஸ்மிருதியும் இவ்வாறு கூறுகின்றது.*

''ததிதயேதத்பரம் ப்ரஹ்மா த்யேயம் தத்ஸூர்யமண்டலே
ஸவிது: ஸகலோத்பத்திஸதிதிஸம்ஹாரகாரிண:.
வரேண்யமாச்ரயணீயம யதாதாரமிதம ஜகத்
பர்க: ஸவஸாக்ஷாத்காரேணாவித்யா தத்கார்யதாஹகம்.
தேவஸய ஜ்ஞானரூபஸ்ய ஸவானந்தாத் க்ரீடதோ∫பி வா
தீமஹ்யஹம் ஸ ஏவேதி தேனைவாபேதஸித்தயே.
தியோ∫ந்த:கரணே வ்ருத்தீ: ப்ரதயக் ப்ரவணகாரிணீ:
ய இத்யரூபமவ்யக்தம் ஸத்யஜ்ஞானாதிலக்ஷணம.
நோ∫ஸ்மாகம் பஹூதாத்யஸதபேதேனாநேகதேஹினாம
ப்ரசோதயாத் ப்ரேரயது ஸதயஜ்ஞானாதிலக்ஷணம்.''[37]

ஜ்ஞானாஜ்ஞானமுகம் ஸமஸத ஜகதப்யேகேன யேன ஸ்புரேத்
யஸ்மின ஸர்வமிதம ஜகத ஹி ரஜதம் சுக்தாவிவ த்யோததே
மர்த்யாமாத்ய பசுத்ருமப்ரப்ருதிபிர் யத்தாயதே ஸர்வதா
சைதன்யம் ஜடவர்க்கந்தரஹிதம் ஜ்யோதிஸ்ததஸ்ம்யாந்தரம்.

*அறிவினாலும் அறிவில்லாமையாலும் ஏற்படக் கூடிய எல்லா உலகமும் எந்த வஸ்துவால் பிரகாசிக்கின்றதோ, எந்த வஸ்துவில் இந்த உலகமானது கிளிஞ்சலில் வெள்ளி தோன்றுவதுபோல் தோன்றுகிறதோ. எந்த வஸ்துவால் மனிதன், தேவன், பசு, மரம் முதலியவைகள் நிலைபெற்றிருக்கின்றதோ, அந்த ஸ்வப்ரகாச சைதன்யமானது - ஜடவர்க்க சம்பந்தமற்ற ஆந்தரமான தேஜஸ் - நானாக இருக்கிறேன்.*

---

*36.* தை.உ. *2.8., 3.10.*

*37.* ஸ்ம்ருதிபாஸ்கரே q. by ஸ்ம்ரு.மு. ஆ.கா.

இததமத்யந்தஸமக்ஷேபாத ச்ருத்ஸம்ருதயநுஸாரத:
அதிபுண்யஸ்ய காயத்ரீமந்த்ரஸ்யார்த்ததோ நிரூபித:
ஸாரபூதம் யதத்ர ஸ்யாத் தத்க்ராஹ்யமகிலைர்ஜனை:
மானுஷ்யகப்ரமாதோத்தமன்யத் ஸ்யான்னைம கிஞ்சன.

இவ்விதம் சுருதிஸ்மிருதிகளை அனுசரித்து மிக சுருக்கமாக மிகவும் புண்யத்தைக் கொடுக்கக் கூடிய காயத்ரீ மகா மந்திரத்தினுடைய அர்த்தமானது நிரூபணம் செய்யப்பட்டது. இதில் சாரமாக ஏதாவது இருந்தால் எல்லோரும் இதை ஏற்றுக்கொள்ளவேண்டும். மனிதனுடைய குற்றத்தால் விபரீதமாக ஏதேனும் இருக்கலாம்.

|| ஓம் தத் ஸத் ||

# சுருக்கு வடிவங்கள்

| | | |
|---|---|---|
| அ.கோ. | : | அமரகோச: |
| ஆ.த.ஸூ. | : | ஆபஸ்தம்ப தர்ம ஸூத்ரம் |
| ஆ.ப்ரா. | : | ஆர்ஷேய ப்ராஹ்மணம் |
| ஐ.உ. | : | ஐதரேய உபநிஷத் |
| ஐ.ப்ரா. | : | ஐதரேய ப்ராஹ்மணம் |
| க.உ. | : | கடோபநிஷத் |
| கா.ஸ.ஸூ. | : | காத்யாயன ஸர்வானுக்ரம ஸூத்ரம் |
| கே.உ. | : | கேனோபநிஷத் |
| கௌ.தூ.ஸூ. | : | கௌதம தர்ம ஸூத்ரம் |
| சா.உ. | : | சாந்தோக்யோபநிஷத் |
| ஜை.உ.ப்ரா. | : | சாம்கர பாஷ்யம் |
| ஜை.ப்ரா. | : | ஜைமிநீய உபநிஷத் ப்ராஹ்மணம் |
| தா.ப்ரா. | : | ஜைமிநீய ப்ராஹ்மணம் |
| தை.ஆ. | : | தாண்ஹ்ய ப்ராட்மணம் |
| தை.உ. | : | தைத்திரீய ஆரண்யகம் |
| தை.ஸம். | : | தைத்திரீய உபநிஷத் |
| நி.க. | : | தைத்திரீய ஸம்ஹிதா |
| ப்ர.ஸா. | : | நிர்ணய கல்பவல்லீ |
| ப்ர.ஸூ. | : | ப்ரபஞ்சஸார: |
| ப்ரு.உ. | : | ப்ரஹ்மஸூத்ரம் |
| ப.கீ. | : | ப்ருஹதாரண்யக உபநிஷத் |
| மை.ஸம். | : | பகவத் கீதா |
| ரிக். | : | மைத்ராயணீய ஸம்ஹிதா |
| சாம்.பா. | : | ஸ்மிருதிமுக்தாபலே ஆஹ்நிககாண்ட: |
| ஸம்ரு.மு.ஆ.கா. | : | ரிக்வேத: |

**கண்வ., வஸிஷ்ட., மனு., முதலியவை ஸ்மிருதிகளைக் குறிக்கின்றது.**